[22nd March 1961

SRI A. VEDARATHNAM : கனம் தொழில் அமைச்சர் அவர்கள் பல மேல்நாடுகளுக்குச் சென்று அங்கு பெற்ற செல்வாக்கின் மூலமாக அங்குள்ள சில நிபுணர்களைக் கொண்டுவந்து உயர்தரக் கல்வி போதிப்பதற்கு முயற்சி எடுப்பார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இண்டியன் இன்ஸ்டிட்யூட் ஆப் டெக்னலஜியில் ஜெர்மன் நிபுணர்கள் உதவி செய்துக்கொண்டு வருகிறார்கள்.

SRI S. NAGARAJA MONIGAR : கனம் தொழில் அமைச்சர் அவர்கள் அந்நிய நாடுகளைப் பார்த்த வரையில் அங்கு தொழில்கள் குவியல் முறையில் ஏற்படுத்துகிறார்களா ? அல்லது பரவலாக ஏற்படுத்துவதை ஆமோதிக்கிறார்களா ? அங்குள்ள முன்னேற்றத்தை வைத்துக்கொண்டு நம் நாட்டில் பரவலான முறையில் தொழில்கள் அமைப்பதிலுள்ள கஷ்டங்கள் அல்லது அனுகூலங்கள் என்னென்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : மேல் நாடுகளில் கூட தொழில்கள் எல்லாம் குவியலாகத்தான் சிலயிடங்களில் இருக்கின்றன. எந்தெந்த இடத்தில் இயற்கை வளம் இருக்கிறதோ அங்கு அந்தத் தொழில்கள் எல்லாம் இருக்கும். பிட்ஸ்பர்க்கில்தான் இரும்புத் தொழிற்சாலைகள் எல்லாம் இருக்கின்றன. எங்கெங்கு வசதிகள் இருக்கிறதோ அங்கு தொழில்கள் அமைக்கப்படும். கனம் அங்கத்தினர் போட்ட கேள்வி அவரது ஜில்லாவிற்கு சாதகமாகயில்லை என்று மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

*Kinder-garden schools*

*1001 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஆரம்பப் பள்ளிகளுக்கு குழந்தைகளை தயார்படுத்த நமது ராஜ்யத்தில் எத்தனை கிண்டர் கார்டன் பள்ளிகள் எங்கெங்கே உள்ளன, ஜில்லாவாரியாக ?

(இ) தனியார் நடத்துவது எத்தனை ? சர்க்கார் நடத்துவது எத்தனை?

(உ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எந்த அளவுக்கு அதிகப்படுத்த உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Three schools in Madras City and one in Kanyakumari district.

(b) Three and one.

(c) There is no proposal for expansion of this kind of education during the Third Five-Year Plan.

SRI V. K. KOTHANDARAMAN : நேரு பிறந்த தினத்தை குழந்தைகள் தினம் என்று சிறப்பான முறையில் கொண்டாடப்படுகிறது. ஆகவே, ஆரம்ப பாடசாலைகளை பக்குவப்படுத்தி சிறு குழந்தைகளுக்கு இதேபோன்று கிண்டர் கார்டன் பாடசாலைகளை ஏற்படுத்துவதற்கு எதனால் இவ்வளவு கவனக்குறைவு அல்லது சிரத்தைக்குறைவு ஏற்படுகிறது, காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நேரு பிறந்த தினம் கொண்டாடுவதற்கும் இந்த கேள்விக்கும் என்ன சம்பந்தம் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. புரிந்துகொண்ட பிறபாடு தான் இதற்கு பதில் சொல்ல முடியும்.

22nd March 1961]

**Sri K. ANBAZHAGAN** : கிண்டர் கார்டன் முறையில் குழந்தைகளுக்கு பயிற்சி அளிப்பதை நம் நாட்டிற்கு ஏற்ற விதத்தில் மாற்றி வேறு விதத்தில் கையாண்டு பயிற்சி முறைப்பள்ளிகள் ஏற்படுத்தமுடியும் என்ற கருத்தை கனம் அமைச்சர் அவர்கள் வெளி யிட்டார்களே, அது பற்றி இப்பொழுது ஏதாவது திட்டமிருக்கிறதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : பரிசீலனையில் இருக்கிறது.

**Sri A. VEDARATHNAM** : பள்ளி செல்லும் வயதிற்கு முந்திய குழந்தைகளுக்காக நம் மாநிலத்தில் கி டர் கார்டன் முறை, மாண்டிசோரி முறை, ப்ரி-பேஸிக் என்ற மூன்று திட்டங்கள் அமுலில் இருக்கிறதே, அரசாங்க அனுபவத்தில் இதை பரீட்சித்துப் பார்த்ததில் இதில் எந்த முறை சிறந்தது என்று அறிவிக்க முடியுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : ஒவ்வொரு முறை யிலும் சில சிறந்த அம்சங்கள் இருக்கின்றன. பணியாற்றக் கூடிய ஆசிரியர்களைப் பொறுத்திருக்கிறது, எந்த முறை வெற்றி பெறுகிறது என்பது. இதில் முக்கிய கஷ்டம், இதில் ஏற்படக்கூடிய செலவு. ஒவ் வொரு குழந்தைகளுக்கும் அதிக செலவு ஏற்படுவதால் லட்சக்கணக்கான குழந்தைகளுக்கு இப்படிப்பட்ட பயிற்சி கொடுப்பது என்பது முடியாத காரியம். ஆகவே கனம் அன்பழகன் அவர்கள் கேட்ட கேள்வியின் அடிப் படையில், நம் நாட்டிற்கு ஏற்ற சூழ்நிலையில் தகுந்தபடி எப்படி இந்த முறையை மாற்றியமைத்து எல்லாக் குழந்தைகளுக்கும் எவ்வாறு கொடுக்க முடியும் என்பது பரிசீலனையில் இருக்கிறது.

*Small scale Industries (Aids)*

*1002 *Q.*— Sri V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் **Small-scale Industries**-களுக்கு **State Bank** கள் மூலம் என்னென்ன உதவி செய்யப்படுகிறது ?

(இ) கடன் தொகை எவ்வளவு வரை கொடுக்கப்படுகிறது ?

(உ) அப்படி கடன் கொடுத்தால், என்னென்ன நிபந்தனைகளின் பேரில் கொடுக்கப்படுகிறது ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) A copy of the pamphlet issued by the State Bank containing necessary particulars in respect of the Pilot Scheme is placed in the Library of the Madras Legislature. The scheme has been extended to all branches of the Bank. It is understood that the State Bank is bringing out a revised pamphlet which may be obtained from them for further particulars.

*Political sufferers (relief)*

* 1003 *Q.*—Sri A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have received recently any petition from the General Secretary, Madras District Political Sufferer's Conference, regarding relief to political sufferers; and

(*b*) if so, the action taken thereon?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) As adequate assistance to political sufferers is being already rendered no further action was considered necessary.